# வைதிக தர்ம வர்த்தனி



மஹிஷாஸுரமர்த்தனீ.


ஆசிரியர் :

மலர் 13 ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா, சார்வரி ௵

இதழ் 12 'மாம்பலம் குருகுலம்' புரட்டாசி ௴

No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்

சென்னை—17.




## யஜுர்வேத ஸந்த்யா வந்தனம்.

( ஐந்தாம் பதிப்பு. )

ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம், பதவுரை, கருத்து, ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்கள், சில புதிய விஷயங்கள் அடங்கியது.

விலை ரூ. 1—50. V. P. P. யில் அனுப்பினல் ரூ. 2—25.

கிடைக்குமிடம் :— ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா, 'மாம்பலம் குருகுலம்' 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம், சென்னை 17.

**ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் — நவராத்ரிவரை பாதி விலை.**

*ஸம்ஸ்கிருதத்திலும், தமிழிலும் பாஸ்கரராயரின் பாஷ்ய ஸங்க்ரஹமும், லலிதாஷ்டோத்தரமும் சேர்ந்தது.* 255 பக்கம். *நவராத்ரியில் தேவிக்கு அர்ச்சனை செய்ய பலருக்கும் பயன்பட* ரூ. 2—50 விலையை ரூ. 1–25 ஆக்கினேம். *தபால் சார்ஜ் தனி.* புக் போஸ்டிற்கு ரூ. 1–50. V. P. ஆனல் ரூ. 2–06 ஆகும்.

**நவராத்ரி பூஜை கல்பம் :** *கலசம் வைத்து பூஜை, கன்யா பூஜை, துர்க்கா லக்ஷ்மி ஸரஸ்வதி பூஜை, தனித்தனி 3 அஷ்டோத்தர நாம, கொலுவின் தத்வமிவைகளும் மற்றும் பல விஷயங்களும் சேர்ந்தது.* 45 ந. பை. ஸ்டாம்பனுப்பி குருகுலத்தில் பெறலாம்.

*கிடைக்குமிடம் :—*

*ஆசிரியர் :* **ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,**

"மாம்பலம் குருகுலம்"

No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்,

சென்னை—17.

## சார்வரி௵ புரட்டாசிமீ வர்ஷருது. தக்ஷிணாயனம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஸெப்டம்பர்மீ 16 | வெள். | ஏகா. | 45-02 | பூச. | 60-00 | — | — |
| 2 | 17 | சனி | த்வா. | 49-50 | ,, | 5-25 | சி. ம. | த்வா. |
| 3 | 18 | ஞா. | த்ர. | 53-27 | ஆயி. | 11-15 | சி. ம. | த்ர. |
| 4 | 19 | திங். | சசி. | 55-45 | மகம் | 15-55 | ம. சி. | சசி. |
| 5 | 20 | செவ். ● | அமா. | 56-40 | பூரம் | 19-15 | சி. அ. | அமா. |
| 6 | 21 | புதன் | ப்ர. | 56-17 | உத். | 21-17 | அ. சி. | ப்ர. |
| 7 | 22 | வியா. | த்வி. | 54-42 | ஹஸ். | 22-03 | சி. | த்வி. |
| 8 | 23 | வெள். | த்ரி. | 52-05 | சித். | 21-42 | சி. | த்ரி. |
| 9 | 24 | சனி | சது. | 48-35 | சுவா. | 20-25 | அ. சி | சது. |
| 10 | 25 | ஞா. | பஞ். | 44-22 | விசா. | 18-20 | ம. | பஞ். |
| 11 | 26 | திங். | ஷஷ். | 39-35 | அனு. | 15-37 | சி. | ஷ. |
| 12 | 27 | செவ் | ஸப். | 34-25 | கேட். | 12-27 | அ. | ஸப். |
| 13 | 28 | புதன் | அஷ் | 28-55 | மூல. | 8-55 | ம. அ. | அஷ் |
| 14 | 29 | வியா. | நவ. | 23-15 | பூரா. | 5-13 | சி. | ந. த. |
| 15 | 30 | வெள். | தசமி | 17-33 | உத்ரா | 1-20 | சி. ம. | ஏகா. |
| | | | | | சிர. | 57-35 | சி. | |
| 16 | 1960௵ அக்டோபர்மீ 1 | சனி | ஏகா. | 11-58 | அவி. | 54-03 | சி. அ. | த்வா. |
| 17 | 2 | ஞா. | த்வா. | 6-38 | சத. | 50-53 | சி. | த்ர. |
| 18 | 3 | திங். | த்ர | 1-48 | பூரட். | 48-23 | ம. சி. | சசி. |
| | | | சசி. | 57-35 | | | | |
| 19 | 4 | செவ் ○ | பௌ. | 54-18 | உத்ர. | 46-43 | அ. | பௌ |
| 20 | 5 | புதன் | ப்ர. | 52-08 | ரேவ. | 46-08 | ம. | ப்ர. |
| 21 | 6 | வியா. | த்வி. | 51-20 | அசு. | 46-50 | அ. சி. | த்வி. |
| 22 | 7 | வெள். | த்ரி. | 52-00 | பர. | 49-00 | சி. | த்ரி. |
| 23 | 8 | சனி | சது | 54-15 | கிரு. | 52-40 | அ. | சது. |
| 24 | 9 | ஞா. | பஞ். | 58-02 | ரோ. | 57-48 | சி. | பஞ். |
| 25 | 10 | திங். | ஷஷ் | 60-00 | மிருக. | 60-00 | அ. | ஷஷ் |
| 26 | 11 | செவ். | ,, | 3-05 | ,, | 4-10 | சி. ம. | சப். |
| 27 | 12 | புதன் | ஸப் | 9-02 | திரு. | 11-22 | சி. | அஷ் |
| 28 | 13 | வியா. | அஷ் | 15-17 | புன. | 18-50 | அ. | நவ. |
| 29 | 14 | வெள். | நவ. | 21-20 | பூச. | 26-02 | ம. | — |
| 30 | 15 | சனி | தசமி | 26-25 | ஆயி. | 32-20 | ம. அ. | தச. |
| 31 | 16 | ஞா. | ஏகா. | 30-15 | மக. | 37-23 | ம. சி. | ஏகா. |

1, 15, 31௳ ஏகாதசி, 3, 17௳ ப்ரதோஷம், 5௳ மஹாளய அமா. 14௳ ஸரஸ்வதி பூஜை, 15௳ விஜயதசமி, 19௳ பௌ., 23௳ க்ரு.

அதிதி தெருவில் நிற்கையில் க்ரஹஸ்தன் சாப்பிட்டால்

यतो धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரிஹூ புரட்டாசிமீ | இதழ் 12



## பொருள் அடக்கம்.



வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம்:
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

உலக சாந்திக்கு உபநிஷத் கூறும்

# பஞ்ச சீலம்.

செல்வத்தில் பெருத்த தேசம், விக்ஞானத்தில் உயர்ந்த தேசம், படையில் பெருத்த தேசம், ஸாஹஸத்தில் சிறந்த தேசம் இப்படி ஒவ்வொரு வகையில் ஒவ்வொரு தேசம் சிறந்ததெனக் கூறப்படுகிறது. ஆனால் சாந்தியில் சிறந்த தேசம் ஏதேனு முண்டோ ? ஒன்றுமில்லை ! உள் நாட்டுக் கலகம் ! வேலை நிறுத்தம் ! அன்ய நாட்டு ஆக்ரமிப்பு ! கக்ஷிச் சண்டைகள் ! உணவுப் பண்டம் பத்தாக் குறை ! இவை மனிதரால் ஏற்படும் துன்பங்கள். அரசியலே இதற்குப் பொறுப்பாகும்.

தீயால் சேதம், நீரால் சேதம், பூகம்பம், மழையின்மை, பஞ்சம், கொள்ளை நோய் முதலிய தெய்விகமான துன்பங்கள் பல. இவைகளைப் பிரித்து, ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம், ஆதி தெய்விகம் என்பர். இவைகள் அகல, முன் ஆங்காங்கு சாந்தி! சாந்தி!! சாந்தி !! எனச் சிறந்த வேதத்வனி கிளம்பும் ! விதிப்படி வேள்விகள் நடக்கும். ஆகம விதிப்படி ஆராதநம் நடக்கும். இப்போது ? ? ?

பாரத தேசத்திலே சிறிதளவு தெய்வ வாஸனை கமழ சாந்தியும் நிலவியது. குடியரசு தோன்றிய பின் எல்லாவற்றிற்கும் மேனாட்டு ஆசாரமே கைக்கொள்ளப்பட்டது. ஆதலின் மேனாடுபோல் இன்னாடும் சாந்தியை இழந்தது. எவருக்கும் எங்கும் மநஸ் சாந்தியில்லை. கிராமம் நகரம் முதலிய விடங்களில் கூறவே வேண்டாம். எங்கும் அமளி! துன்பம்!! தேச தலைவர் வாயால் கூறிவந்த பஞ்சசீலம் பறந்து விட்டது ! துன்பம் நிலைத்து விட்டது.

1. ஸத்யத்தைப் பேசு. ஸத்யமாக நட. பொய் கூருதே.
2. தர்மத்தைச் செய். தர்மமாக ஆக்ஷி, வியாபாரம், க்ருஷி முதலியவற்றைச் செய்.
3. பெற்ற தாய், பிறந்த நாடு, உலக அன்னை இவர்களுக்கு த்ரோகம் செய்யாதே. சுயநலங் கொண்டு மக்களுக்குத் தீங்கிழைக்காதே.
4. தந்தையை, தந்தை போன்ற நம் நாட்டு முனிவர்களைத் தெய்வமாகக் கருது. உண்மை தேசத் தந்தை வியாஸர், மநுமுதலியவர்கள்.
5. இம்மை, மறுமைகளுக்கு வழிகாட்டும் வேத சாஸ்த்ரம் என்னும் இறைவன் வாக்கிற்கு மதிப்புவை. அதன்படி நட.

இவைகளைக் கைப்பற்றும் நாடே சாந்தியுள்ள நாடாகும். இதே நம் உபநிஷத். सत्यं वद ! धर्मं चर ! मातृदेवो भव ! पितृदेवो भव ! आचार्यदेवो भव ! ॥ என வர்ணித்தது. பாரதநாடு கண் விழிக்குமா ?

---

**ஆபோசனம்—ஸுராபானம், அன்னம்—கோ மாம்ஸமாம்**

## சந்தாதாரர்களுக்கு.

ஈசன் அருளாலும், ஸ்ரீ ஜகத்குருவின் க்ருபையாலும், உங்கள் ஒவ்வொருவருடைய இடைவிடா ஆதரவினுலும், அன்பினுலும் இந்த புரட்டாசியுடன் 13-வது ஆண்டு பூர்த்தி யாகின்றது என்பதை மனமார்ந்த நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிருேம்.

சென்ற மாத இதழுடனேயே இந்த மாதத்துடன் சந்தா முடிந்துவிடுபவர்களுக்கு ஒரு ஞாபகச்சீட்டு அனுப்பியிருக் கிருேம்.

தயவுசெய்து ஒவ்வொருவரும் தங்கள் 14வது ஆண்டு சந்தா ரூ.5-ஐ உடனே அனுப்பி ஆதரிக்க வேண்டுகிருேம்.

முக்கிய குறிப்பு :-சந்தாவை இரண்டாம் பக்கத்தில் விலாஸம் கொடுத்துள்ள கடவாசல் காரியாலயத்திற்கே அனுப்பவேண்டும்.

**ஆசிரியர் & மானேஜர்.**

---

## 14-வது ஆண்டில் வரும் விஷயங்கள்.

*ஆபஸ்தம்ப ஶ்ராத்த ப்ரயோகமும், மந்த்ரார்த்தமும்.*
*சிவானந்த லஹரீ : ஸம்ஸ்கிருதம் — தமிழ் ஶ்லோகம் — தமிழ் அர்த்தத்துடன்.*
*உத்தர கீதை.*
*பிருஹதாரண்ய உபநிஷத்.*
*பக்தி கதைகள். மற்றும் பல புது அம்சங்களுடன்*
*மஹா பாரதப் பூஞ்சோலை: பாரத கேஸரி ஸ்ரீ T. S. பால கிருஷ்ண சாஸ்த்ரிகள் எழுதுவது.*
*நவ ரஸம்: அக்ஷயபரணி எழுதுவது,*
*ஆயுஷ்காமீயம்: ஸ்வஸ்திஸ்ரீ எழுதுவது,*
*தியாகோபநிஷத்: ஸத்கதாம்ருத கலாநிதி ஸ்ரீ T. S. பால கிருஷ்ண சாஸ்த்ரிகள் எழுதுவது,*
*துலா புராணம்: ஆசிரியர் எழுதுவது,*
*உபமன்யு பக்தவிலாசம்: ஆசிரியர் எழுதுவது, ஆகிய விஷயங்களும் தொடர்ந்து வெளிவருகின்றன.*

---

**ஆதலால் அதிதிக்கு அன்ன மளிக்காமல் உண்ணுதே. பார்த்தவுடன் மனதைக் கலக்குகிருர்கள்.**

  



# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

(ஆவணிமீ தொடர்ச்சி)

கிழக்கு முகமாக உள்ள அக்னி தேவனைப் பார்த்து "ப்ராங்முகோ[2] தே[3]வ ஹே, அக்னே மம அபி[4]முகே[2]ா ப[4]வ" என்று ப்ரார்திக்தவுடன் பகவான் நமக்கு எதிரில் மேற்குமுகமாகத் திரும்பி விடுகிருர்.

இதன் பிறகு அக்னியை அக்ஷதைகளால் எட்டு திக்கு களிலும் அலங்கரிக்கவேண்டும். இருவகை ஸம்ப்ரதாயம் உண்டு. (1) காஞ்சீ மண்டலத்திலுள்ளவர் செய்வது. கிழக்கில் ஆரம்பித்து அக்னி மூலே தெற்கு இம்மாதிரி யாக ஈசான்ய மூலே வரையிலும் கிரமமாக அக்னயே நம: ஜாதவேதஸே நம: ஸஹோஜஸே நம: அஜிராப்ர பவே நம: வைஶ்வானராய நம: நர்யாபஸே நம; பங்க்தி ராதஸே நம: விஸர்ப்பிணே நம: என்னும் மந்திரங்களால் அலங்கரிப்பது. பிறகு அக்னியில் யக்ஞ புருஷாய நம: என்று சுத்த அக்ஷதையால் அர்சிப்பது. (மஞ்சள் குங்குமம் முதலியவை கலந்த அக்ஷதையே அலங்காரத்திற்கு. சுத்த அக்ஷதையை அக்னியில் போட வேண்டும். குங்குமம் மஞ்சள் ஔபாஸந அக்னியில் சேரக்கூடாது.)

(2) மற்ற தேசத்திலுள்ளவர் செய்வது கிழக்கு முதல் ஈஶாந்யம் வரை இந்திராயநம: முதலான திக்பால நாமாக்களிஞல் அலங்காரம் செய்வது.

**அக்னயே நம:** என்று அக்னியை அர்சிக்க வேண்டும்.

இதன் பிறகு 2 ஸம்பிரதாயத்திலும் வித்தியாஸ மில்லே. ஆத்மார்ச்சனம். ப்ராம்ஹணரையும் அர்சித்து விட்டு பிறகு பரிஷேசனம்.

பக்கத்தி லுள்ளவரைப் பார்த்து "ஹோஷ்யாமி" என்று தெரிவிக்க வேண்டும். அவரும் ஜுஹுதி என்று உத்திரவு கொடுப்பார். (ஒருவரும் இல்லாத ஸமயம் தானே ஜுஹுதி என்று சொல்லிக்கொள்ளவும்). இதன்

---

தொட்டால் பொருளே அபகரிக்கிருர்கள்.

பின் ஒட்டைச் சாண் நீளமுள்ள தோலுறியாத பலாச ஸமித்தைக் கிழக்கு அக்ரமாக அக்னியில் வைத்துவிட்டு தணலாக மாறிய அதன்மீது 2 ஹோமங்களையும் ஒன்றின்மீது மற்றது படாமல் செய்யவேண்டும். இந்த ஹோம த்ரவ்யம் நன்ருக ஶ்ருதம் ஆகும்படி செய்ய வேண்டும். முதல் ஹோமத்தின் மீது இரண்டாவது ஹோமம் பட்டுவிடுமேயாகில் **यत्र वेत्थ** "யத்ர வேத்த" என்னும் மந்திரத்தைச் சொல்லி (ஸ்வாஹா என்று சொல்ல வேண்டியதில்லை.) ஓர் ஸமித்தை அக்னியில் கிழக்கு அக்ரமாக வைத்துப் பிறகு மறுபடியும் இரண்டு ஹோமங்களையும் மந்திர மில்லாமல் செய்யவேண்டும் என [அஷ்.3, ப்ர.7. அனு.1ல்] கூறுகிறது.

பிறகு உபஸ்தானம் செய்து, அநாக்ஞாதாதி மந்திர ஜபமும் செய்து "ப்ருஹத் ஸாம" என்று ரக்ஷை தரித்துக்கொண்டு காயேந வாசா என்று சொல்லி கர்மாவை பகவானுக்கு அர்ப்பணம் செய்யவேண்டியது.

ஔபாஸந ஹோமத்தை அக்ஷதை, யவம் இவைகளில் ஏதாவது ஒரு த்ரவ்யத்தினுல் செய்ய வேண்டும். இம்மாதிரி செய்யும் தான்ய ஹோமத்தின் அளவு, வலது கையிலிருக்கும் கட்டைவிரல் தவிர மற்ற நான்கு விரல்களிலுள்ள 12 கணுக்களும் மறையும் அளவு இருக்க வேண்டும்.

ஸ்தாலீபாகத்திற்கு எலந்தைப்பழ அளவு சருஹோமம் செய்யவேண்டியது. ஆஜ்ய ஹோமம் எல்லாம் உளுந்து கனமுள்ள தாரையாகச் செய்யவேண்டும். ஔபாஸந ஸ்தாலீ பாகங்கள் முடிந்த பிறகு புருஷ ஸூக்த ஜபம் செய்வதுண்டு.

### ஸ்தாலீபாகம்.

ஸ்தாலீபாகம் என்பது சில குறிப்பிட்ட காலத்தில் செய்யவேண்டிய நித்ய கர்மாவாகும். (1) தர்ச பூர்ண மாஸ ஸ்தாலீபாக அமாவாஸ்யை, பௌர்ணமிக்கு அடுத்த பிரதமைகளில் ப்ரதி மாதம் செய்வது. ஶரத்ருதுவில் அமாவாஸ்யை அல்லது பௌர்ணமியில் செய்வது. (2) ஆக்ரயண ஸ்தாலீபாகம், (3) உபாகர்ம தினத்தில் இரவு ஸர்ப பலி என்றும், மார்கஶீர்ஷ பௌர்ணமியில் இந்த ஸர்பபலியின் உத்ஸர்ஜனமும் ஒன்று, (4) உத்தரா

---

போகத்தினுலோ பாபமும் ரோகமும் உண்டாகும்.

யணத்தில் செய்யக்கூடியது ஈமாந பலி என்றும், ஸ்தாலீ பாகமொன்றும். இந்த ஸ்தாலீ பாகங்களால் அக்னிக்கு திருப்தி அதிகமாகி (இவைகளில் தர்ச பூர்ணமாஸ ஸ்தாலீ பாகம் செய்தால்தான் அக்னிக்குப் பலமும் ஸீமந்தம் ஶ்ராத்தம் முதலிய கர்மாக்களைச் செய்ய யோக்யதையும் ஏற்படும்.) நமக்கு வேண்டியதைக் கொடுத்தருள்வார்.

இந்த ஸ்தாலீபாகம் விவாஹமான உடனேயே செய்ய வேண்டியது. அப்படிச் செய்யாவிடில் மிகவும் தோஷம் ஏற்படுகிறதாக ஶ்ருதி கூறுகிறது. ஸ்தாலீபாகம் செய்யாதவர் ஔபாஸநாக்னியில் மாதா பிதாக்களின் ஶ்ராத்தங்களையும், பும்ஸவநம் ஸீமந்தம் முதலிய கர்மாக்களையும் செய்வதற்கும் பூர்ணமான பலன் உண்டாகாது. இதனால் பித்ரு ஶாபம்முதலியதும் நமக்குத் தெரியாமலே தோன்றுகிறது. ஆதலால் ஸ்தாலீபாகத்தை எல்லோரும் விவாஹமான உடனேயே அவஶ்யம் செய்யவேண்டும். ஸ்தாலீ பாகம் செய்யவேண்டிய தினம் பஞ்சாங்கத்தில் இஷ்டி என்று போட்டிருக்கும் தினம்தான். இது செய்யுமுன் தமிழ் தேசத்திலுள்ள அபூர்வமாக சிலரும் ஆந்திரர்கள் எல்லோரும் அங்வாரம் பணீ ஸ்தாலீபாகம் செய்துவிட்டு அதன் பிறகுதான் ஸ்தாலீ பாக ஆரம்பம் செய்கின்றனர். அது அவரவர் ஸம்ப்ரதாயத்தைத் தழுவியது.

தம்பதிகள் ஸங்கல்பம் செய்துகொண்டு அக்னியின் வடக்கில் கிழக்கு முகமாக பத்நீ நின்றுகொண்டு மும்முறை நெல்லைக் குத்த வேண்டும். மறுபடி மும்முறை திட்டவேண்டும். (அக்ஷதையை வைத்துக்கொண்டு செய்யும்போதும் குத்துவதும் திட்டுவதும் அவஶ்யம் கர்மாங்கமானபடியால் பாவனையாவது செய்யவேண்டும்.) பிறகு பதி மும்முறை தீர்தத்தினால் நன்றாகக் களைந்து ஔபாஸனாக்னியில் பக்வம் செய்யவேண்டும். பக்வமான பிறகு லௌகிக ஆஜ்யத்தினால் அபிகாரம் செய்து கிழக்கு அல்லது வடக்காக இறக்கி மறுபடி அபிகாரம் செய்து அக்னி கார்யம் துடங்கி முகாந்தம் முடித்துக்கொண்டு ப்ரதான தர்வியில் இதர தர்வியினால் ஒருமுறை ஆஜ்யம் எடுத்துக்கொண்டு சருவின் மத்தியிலிந்து எலந்தைப்பழ அளவு (கட்டை விரலின் மேல்கணு அளவு) அன்னத்தை கட்டை விரல், நடுவிரல், மோதிர விரல் இம்மூன்று விரல்களால் நகம் படாமல் எடுத்து, சருவின் கிழக்குப் பக்கத்தி

---

ஆதலால் தாஸி எனும் ராக்ஷஸர் முகத்தில் விழிக்காதே.

லிருந்து முன் சொல்லியபடி மறுபடி எடுத்துக்கொண்டு (ஸ்ரீவத்ஸ கோத்ரமுள்ளவர்கள் சருவின் மேற்குப்பக்கத்தி லிருந்து மூன்ருவதுமுறை முன் சொன்னபடி எடுத்துக் கொண்டு) அன்னத்தின் மீது மறுபடி அபிகாரம் செய்து, இதர தர்வியினல் ஸ்தாலியிலுள்ள சருவையும் ப்ரத்யபி காரம் செய்து அக்னியின் மத்தியில் அக்னயே ஸ்வாஹா என்று ஹோமம் செய்யவேண்டும். அக்னியில் ஹோமம் செய்யும் போது பத்நீ பதியைத் தொட்டுக்கொண்டிருக்க வேண்டும் என்று சிலருடைய அபிப்ராயம்.

ஸ்விஷ்டக்ருத் ஹோமம் செய்து பரிதியின் அஞ்சனம் லேப கார்யம் முதலியன செய்து (ஜயாதி கிடையாது) பிரும்மாவை யதாஸ்தானம் அனுப்ப வேண்டும். இதில் தக்ஷிணே கிடையாது என்று சிலர் கூறுவார். பூர்ண பாத்ரம் தக்ஷிணே என்று பல ரிஷிகளின் மதம். பூர்ண பாத்ரம் எனில் சுமார் 4-படி அக்ஷதை யாகும். இதன் கிரயமாவது கொடுக்கலாம். அநாக்ஞாத ஜபம், புருஷ ஸூக்த ஜபம் முதலியன செய்துவிட்டு காயேநவாசா என்று சொல்லி பகவானுக்கு அர்ப்பணம் பண்ணவேண்டி யது. சருசேஷத்தை ப்ரும்ஹாவின் போஜந பாத்ரத்தில் சேர்க்கவேண்டும்.

ஆக்ரயணம் முதலான எல்லா ஸ்தாலீபாகங்களும் இதே முறைப்படிதான் செய்யவேண்டும். தேவதை மாறு பட்டிருக்கும்.

இந்த ஸ்தாலீபாகம் செய்யுமுன் பல ஸ்தாலீபாகம் விட்டுப்போயிருந்தால் அதற்காக ஸர்வ ப்ராயச்சித்த ஹோமம் செய்துவிட்டு ஸ்தாலீபாக ஸங்கல்பம் செய்ய வேண்டியது. சிலர் முகாந்த ஹோமம் பண்ணிக்கொண்டு ஸர்வ ப்ராயச்சித்தம் செய்கின்றனர். மற்ருெரு பக்ஷம் ஸ்தாலீபாக ஸங்கல்பத்துக்கு முந்தியே सर्वप्रायश्चित्तार्थं सप्तहोतृहोमं होष्यामि என்று ஸங்கல்பித்துக் கொண்டு महाहविर्होता +पृथिव्यैस्वाहा वाचस्पतये ब्रह्मण इदं என்று ஹோமம் செய்துவிட்டு அதன் பிறகு ஸ்தாலீபாக ஸங்கல் பம் செய்ய வேண்டியது.

**அக்நி கார்யத்தின் விளக்கம் முற்றிற்று.**

---

**தாஸீ கமனம் மானத்தை அகற்றும்.**

## சாந்தோக்ய உபநிஷத்.

ஜாநஸ்ருதி, ஸ்துதி பாடகர்கள் தன்னை ஸ்துதிக்கும் பொழுது படுக்கையை விட்டெழுந்தார். ஸாரதியைப் பார்த்துக் கூறினார். ஸ்தோத்ரத்தை நிறுத்துங்கள். ஸ்தோத்ரம் செய்யத்தக்கவர் ரைக்வரே யாவர்.

ஆதலால் ரைக்வரைத் தேடி அழைத்துவா. ஹம்ஸம் கூறியது போன்ற தேஜஸ் உள்ளவர் அவர் என்றார் அரசன். ஸாரதி ரைக்வரைத் தேடி அவர் அகப்பட வில்லை என, மன்னனிடம் கூறினார். அரசன் எங்கு அத் தகைய பிராம்மணோத்தமரைத் தேடவேண்டுமோ அங்கு தேடு என்றார்.

ஸாரதி பல இடங்களில் தேடி கடைசியில் ஒரு வண்டி யின் கீழ் அமர்ந்து சொறி சிறங்கை சொறிந்து கொண் டிருக்கும் மஹா தேஜஸ்வியான ஒருவரைக் கண்டான். அவரிடம் சென்று, நீர் தான் ரைக்வரோ? என்று கேட் டான். ரைக்வர் மிக்க அநாதரவுடன் ஆமாம் நான்தான் ரைக்வர் என்றார். ரைக்வரைக் கண்டு பிடித்துவிட்டேன் என்று அரசனிடம் சென்று தெரிவித்தான்.

ரைக்வர் கிருஹஸ்தாஸ்ரமத்திற்குச் செல்ல விரும்பி யதை அறிந்து அந்த செலவிற்காக அரசன் அறுநூறு பசுக்களையும், ஒரு கண்டாபரணத்தையும், குதிரை பூட்டிய ஒரு ரதத்தையும் எடுத்துக்கொண்டு ஜாநஸ்ருதியி னிடம் சென்று கூறினார்.

ஓ ரைக்வரே! பசு ஆபரணம் தேர் இவைகளை ஏற் றுக்கொள்ளும். தாங்கள் எந்த தேவதையை உபாஸிக் கிறீர்களோ அந்த தேவதையை எனக்கு உபதேசம் செய் யும் என வேண்டினான்.

ரைக்வர் ஜாநஸ்ருதியைப் பார்த்து இவைகள் எல் லாம் உன்னிடமே இருக்கட்டும். எனக்கு வேண்டாம் என்றார். விவாஹம் செய்துகொள்ள விரும்பிய இவருக்கு நாமளித்தது போதாது என எண்ணி அரசன் ஆயிரம் கோக்களையும் ஹாரம் ரதம் இவைகளுடன் தனது பெண் ணையும் அவர்கள் வஸிக்க ஒரு கிராமத்தையும் தந்து, ஓ பகவன்! தாங்கள் உபாஸிக்கும் தேவதையை உப தேசியுங்கள் என்றார்.

---

**வேச்யா கமனம் தனம் முதலியவைகளையும் அழிக்கும்.**

[இங்கு இருமுறை க்ஷத்ரியனுன அரசனைப் பார்த்து சூத்ர என்று அவர் அழைத்ததால் அவர்களும் உபநிஷத்தைக் கற்று துறவியாகி மற்றவர்களைப்போல் வேதாந்த விசாரம்செய்யலாமா? என்று ஸந்தேஹம் உண்டாயிற்று. அதை அகற்ற பிரும்ம ஸூத்ரத்தில் ஒரு அதிகரணம் தோன்றி சர்ச்சைசெய்து பாஷ்யகாரர் அவர்களுக்கு இந்த முறைப்படி அதிகாரமில்லை. நேராக ஸ்வரத்துடன் கூடிய உபநிஷத்தை விட்டு பாஷாந்தரத்தில் உள்ள உபநிஷத்தர்த்தத்தை விசாரம் செய்ய அதிகாரமுண்டு என்று முடிவு கட்டினுர். ஜன்மாந்தர பரிபாகத்தால் வைராக்யங் கொண்ட உத்தமர்கூட உபநிஷத் வித்யைக்கு ஒரு கௌரவம் தர உபநிஷத்தின் அர்த்தத்தைக் கூறுவார்களே தவிர உபநிஷத்தை ஸாக்ஷாத்தாகக் கூறமாட்டார்.]

சுக் என்றில் சோக மோஹம். த்ர எனில் அதை அகற்ற வேண்டும் என பொருள். இதை வேண்டினதால் க்ஷத்ரியனுன அவனை நோக்கி ரைக்வர் அங்ஙனம் அழைத்தார்.

ரைக்வர் அரசனைப் பார்த்து, இந்தப் பெண்ணை முன்னிட்டுக்கொண்டு இவைகளை ஏற்றுக் கொள்கிறேன். இந்தமூலமாக உனக்கு என்னை உபதேசிக்கும்படி செய்துவிட்டாய். மஹா விருக்ஷமென்ற தேசத்தில் நான் வஸிக்கும் கிராமங்கள் நீ எனக்கு அளித்தாய் என்ற அடையாளத்தைக் காட்ட ரைக்வ பர்ணம் என்றே அழைக்கப் படட்டும் என்று கூறி அவருக்கும் உபதேசித்தார். அது ஸம்வர்க்க வித்யை எனப்படும்.

வாயுவே ஸம்வர்க்கம்.—ஸம்வர்க்கமென்ருல் எல்லாவற்றையும் தனக்குள் இழுத்துக்கொள்கிற ஸ்வபாவமுள்ளது என்று பொருள். எல்லாவற்றையும் இழுக்கும் ஸ்வபாவமுள்ளது என்று த்யாநம் செய்யவேண்டும்.

அக்நி ஜ்வலித்து ஶாந்தி அடையும்போது வாயுவினிடமே சேருகிறது. அக்நி ஸ்வரூபம் மாறி வாயுவாகி விடுகிறது. ஸூர்யன் அஸ்தமன மாகும்போது வாயுவையே அடைகிருன். சந்த்ரனும் அங்ஙனமே வாயுவை அடைகிருன்.

---

**விதவா கமனம் ஆயுஸ்ஸை அகற்றும்.**



## அஷ்டாவக்ர கீதை.

ஜீவனத்திலும் அவனுக்கு விருப்பு வெறுப்பு இல்லை. எல்லா ஸங்கல்பங்களையும் விட்டு ஒய்வடைந்த மஹா புருஷனுக்கு மோஹமேது? உலகேது? த்யானமேது? முக்தி பெற முயற்சிப்பது என்பதேது?

உலகம் இருக்கின்றது என்று எண்ணியவனே அது உண்மையல்ல என்ற க்ஞானம் வர முயற்சிக்கவேண்டும். வாஸனையை இழந்தவன் எதைச் செய்வான்? உலகைக் கண்டாலும் காணாதவனாவான்.

மனக்கலக்கமுள்ளவனே மனதை அடக்க முயற்சிக்க வேண்டும். உதார சித்தமுள்ளவனுக்கு மனக்கலக்கம் இல்லை. மற்றவர்களைப் போல் மனதை அடக்கவும் அவன் முயற்சிக்க வேண்டுவதில்லை.

ஞானி உலகத்தவர்களுக்கு மாறுதலாக இருந்தாலும் உலகத்தவர் போல் இருந்தாலும் ஸமாதி, விக்ஷேபம், உலகப்பற்று முதலியனவைகளை அவன் காண்பதில்லை.

உலகம் இருக்கின்றது, இல்லை என்ற பாவனை இல்லாதவனும், நித்ய திருப்தனும், வாஸனையற்றவனுமான ஞானி உலகத்தவர் கண்ணுக்குத் தவறான கார்யத்தைச் செய்பவன் போல் காணப்பட்டாலும், உண்மையில் அவன் ஒன்றும் செய்தவனல்ல.

ஞானிக்கு கர்ம மார்க்கத்திலோ, வேதாந்தத்திலோ ஒரு பிடிவாதம் இராது. எப்பொழுது எது நேருகின்றதோ அதைச் செய்து ஸுகமாக இருப்பான்.

வாஸனை யற்றவனும், பிடிப்பற்றவனும், மாயையிலிருந்து விடுபட்டவனும், ஸ்வச்சந்தமாக உள்ளவனுமான ஞானி ஸமஸ்காரமெனும் காற்றினால் சூழப்பட்டால் உலர்ந்த இலை போல் இருப்பான். ஆரம்பித்த கார்யத்தை முடிப்பானென நம்பமுடியாது. உலர்ந்த இலை ஆடி விழுவது போல் நடுக் கார்யத்தில் நின்று விடுவான்.

ஸம்ஸாரத்தைக் கடந்த ஞானிக்கு ஸுகதுக்கங்கள் இல்லை. எப்பொழுதும் ஆனந்தமாக இருப்பான். உடலற்றவன் போலவே காணப்படுவான்.

---

**பரஸ்திரீ கமனம் எல்லாவற்றையும் அகற்றும்.**

ஆத்ம ஸுகத்தில் ஈடுபட்டவனும், தீரனும் சீதளமாயும், ஸ்வச்சமாயும் உள்ள மநமுள்ள ஞானிக்கு ஒருவனைக் கொல்ல வேண்டுமென்ற எண்ணமோ, நாசமோ கிடையாது.

இயற்கையாகவே சூன்யமான மனமுள்ளவனும், ப்ராக்ருத மனிதனைப்போல் தற்செயலாக ஏதோ ஒன்றைச் செய்கின்றவனுமான ஞானிக்கு மானஅவமானங்கள் இல்லை.

உடலே இந்த கார்யத்தைச் செய்தது. சுத்தரூபியான நான் செய்யவில்லை என்று எண்ணும் ஞானி ஒரு கர்மாவைச் செய்தாலும் செய்யாதவனாகவே ஆவான்.

ஜீவன் முக்தன் ஸுகியாகவும், ஸ்ரீமானாகவும், இருந்து ஸம்ஸாரத்தில் ஈடுபட்டாலும், அதில் பற்றில்லாமலே இருப்பான். முட்டாளாகவும் இருக்கமாட்டான்.

பலவகை வேதாந்த விசாரத்தினால் களைத்தவனும் சாந்தியை அடைந்தவனுமான ஞானி ஒரு ஸங்கல்பமும் செய்யான். ஒன்றையும் அறியான். ஒன்றையும் கேளான் ஒன்றையும் பாரான்.

மஹா புருஷன் ப்ரும்ம ஸ்வரூபத்தை நிச்சயமாக கண்டறிந்து ஸமாதி இல்லாவிடினும், மனக்கலக்கம் இல்லாவிடினும் மோக்ஷ இச்சை இல்லாவிடினும் ஸம்ஸாரி போல்இருந்தாலும் ப்ரும்மஸ்வரூபத்தில் ஈடுபட்டு ப்ரும்மமாகவே இருக்கின்றான்.

அஹங்காரம் இல்லாதவன் ஒரு கர்மாவைச் செய்யவும் மாட்டான். கர்மா செய்யாமல் இருக்கிறேன் என நினைக்கவும் மாட்டான்.

முக்தி நிலையில் உள்ளவனது மநம் ஒருவித கஷ்டமும் சுகமும் இல்லாமலிருக்கும். ஒன்றையும் நினைக்காது. அசையாது. ஆசை ஸந்தேஹம் முதலியன அதனிடம் தோன்றாது.

ஒரு ஸமயம் த்யாநமில்லாமலிருக்கும். ஒன்றிலும் பிரவிருத்தி இல்லாமலிருக்கும். ஒருகாரணமுமின்றி சில ஸமயம் ஏதேனும் ஒன்றை நினைத்தாலும் நினைக்கும் முக்தனது மநம்.

---

**துர்ஜனன், ஸ்வர்ணம், பேரீவாத்யம், துஷ்ட ஸ்திரீ**




# பால பாரதம்




## ராஜதர்ம பர்வா.

**தர்மர் :** அரசனும், மற்றோரும் சோம்பலாக இருக்கக் கூடாதென்பதற்கு ஒரு கதை கூறும்படி பீஷ்மரை வேண்டினர்.

**பீஷ் :** ஒரு ஒட்டை தவம் செய்து நூறு யோஜனை தூரம் தனக்குக் கழுத்து நீளமாக இருக்கவேண்டுமென்று வரம் கேட்டதாம்.

**தர் :** அது எதற்காக ?

**பீஷ் :** தான் இருந்த இடத்திலேயே இருந்து அலையாமல் ஆகாரம் தேடிக் கொள்ளலாம் என்பதற்காக அவ் வரத்தைக் கேட்டது, அவரும் அங்ஙனமே வரம் தந்தார்.

**தர் :** அதனால் தீமை யென்ன ?

**பீஷ் :** ஒரு நாள் நல்ல மழை பொழிய நூறு யோஜனை தூரமுள்ள தனதுதலையை ஒரு குகையில்கொண்டு நிறுத்திற்று. மழைக்காக அங்கு வந்த ஒரு நரி இதன் உடல் வெகு தூரத்தில் இருப்பதால் பய மில்லாமல் அதன் தலையையும் கழுத்தையும் கடித் துத் தின்றது. இங்ஙனம் சோம்பேறித் தனமுள்ள வர் அழிவர். இத்தகைய எண்ணிறந்த கதைகளைக் காணலாம்.

**தர் :** துஷ்டர் ஸாது போலவும், க்ரூரமானவர் ஸாத் விகர் போலவும் வேஷம் தரிப்பதால் உண்மையை எப்படிக் கண்டுபிடிப்பது ?

**பீஷ் :** சிறிது கஷ்டந்தான். இதற்குமுன் இதே விஷயத் தில் நடந்த சரிதத்தைக் கூறுகிறேன் கேள். ப்ரேர கன் என்ற ஓர் அரசன் பூரிகாபுரியை ஆண்டு வந் தான். அவன் ராஜதர்மத்தை விட்டு ராக்ஷஸனைப் போல் இருந்தான்.

**தர் :** ஆனால் அவனுக்கு நல்லகதி கிடைக்காதே !

**பீஷ் :** ஸந்தேக மென்ன? பாபங்களுக்கேற்ற நரகங்களை அநுபவித்து அவனியில் ஓர் நரியாகப் பிறந்து ஸ்மசாநத்தில் வஸித்துவந்தான்.

---

துஷ்ட வாஹனம், கரும்பு, எள் இவைகளை ஹிம்ஸித்தால்

**தர் :** நரிகள் புதரிலல்லவோ பதுங்கியிருந்து ஸமயத்தில் வெளிவந்து பிணத்தைப் பிடுங்கித் தின்னும். இது ஏன் ஸ்மசாநத்திலே வஸித்தது ?

**பீஷ் :** உண்மைதான். இதற்கு ஏதோ ஒரு புண்யத்தினல் முற்பிறவியில் தான் அரசனுக இருந்து இச்சமயம் நரியாகத் தோன்றியது ஞாபகத்திற்கு வந்தது. தான் பிறந்த இடம் சுடுகாடு அருகில் என்பது ஒரு காரணம். அங்கு வஸித்தால் மரணம் யம தண்டனை முதலியன நினைவுக்கு வரும். பாபம் செய்யா திருக்கலாம் என்பது இரண்டாவது காரணம்.

**தர் :** மற்ற ஸ்வஜாதி நரிகளுடன்சேர்ந்து வாழவில்லையா?

**பீஷ் :** இதன் விபரீத செயலைக் கண்டு மற்றவைகள் அதைத் திருத்த முயன்றன. அது பலிக்காததால் இதனுடன் அவை சேரவில்லை.

**தர் :** என்ன விபரீத செயல் இதனிடமிருந்தது ?

**பீஷ் :** மாம்ஸம் உண்பதில்லை. மற்ற பிராணிகளை ஹிம் ஸிப்பதில்லை. தந்த்ரமாக எவரையும் ஏமாற்றுவ தில்லை.

**தர் :** இதெல்லாம் நரி ஜாதியின் ஸ்வபாவ குணம். ஏனதை மறுத்தது ?

**பீஷ் :** முற்பிறவியில் செய்த பாபத்தால்தான் தனக்கு நரகமும் இந்த ஹீந ஜன்மாவும் கிடைத்தது. இனிமேலாவது பாபம் செய்யாம லிருப்போம் என்று அதை மறுத்தது. நரிகள் கை விட்டாலும் ஒரு புலி இதை மந்த்ரியாகக் கொண்டது.

**தர் :** ஆஹா ! இதைவிட அது ஆச்சர்யமாக இருக் கின்றதே ! புலி ஹிம்ஸையும் க்ரூரகுணமும் உரு வாக வந்த ப்ராணி ! இந்த நரியோ மாந்தமான ரிஷிகளைப்போலிருக்கின்றது ! என்றீர்களே. எப் படி புலிக்கு அது மந்த்ரியாயிற்று ?

**பீஷ் :** இந்த நரியின் குணம் புலிக்குக்கூட ஸந்தோஷகர மாக இருந்தது. இதை மந்த்ரியாகக் கொண்டால் கவலை சண்டை கஷ்டம் முதலியவைகளில்லாமல்

---

**தான், அவைகளிலிருந்து குணத்தை நாம் பெறமுடியும்.**

ராஜ்யபாரம் செய்யலா மென நினைத்தது. ஆத லால் நேரில் சென்று பரீக்ஷித்தது அதை.

புலி: நரியே! நீ வஸிப்பது சுடுகாட்டில்! சிலமோ முனி வரைப்போல் இருக்கின்றது! உண்மையைக்கூறு.

நரி: எந்த இடமாக இருந்தா லென்ன? சாந்தமான ஆச்ரமத்திலுள்ளவர் பிறரைஹிம்ஸிப்பதில்லையா?

புலி: அது சரி! நீ எங்களைப்போல் பிறரைக் கொன்று வயிறு வளர்க்கும் ஜாதி அல்லவா?

நரி: ஆம்! அந்த ஜாதியில் பிறந்தவர் அனைவரும் அப் படி இருக்கவேண்டுமென்று விதியா? ஜாதி அதற் குக் காரண மல்ல, ராக்ஷஸரிலும் சாந்தரில்லையா?

புலி: இதைக் கேட்டு ஸந்தோஷமடைந்த புலி நீ எனக்கு மந்திரியாக இரு என்றது.

நரி: என்னிஷ்டப்படி சுகமாக வாழும் என்னை உமக்கு அடிமையாக்கப் பார்க்கிறீரா? பதவி வேண்டாம்.

புலி: எனக்கு நீ அடிமையாகவேண்டாம். நமது அரண்ய ராஜ்யத்தில் பிராணிகளுக்கு தீங்குவராமலும் அக் ரமம் நடக்காதபடியும் காக்க எனக்கு நீயே உற்ற துணைவனுவாய். என் சொல்லை மறுக்காதே!

நரி: வேந்தே! அப்படியானுல் நான் ஒருவனே மந்திரி யாக இருப்பேன். நான் சொன்னபடியே மற்ற அதிகாரிகள் நடக்கவேண்டும். இதற்கு ஸம்மத மானுல் நான் மந்திரி பதவியை ஏற்கிறேன்.

பீஷ்: புலியும் அதற்கிசைந்தது. நரி மந்திரியான பிறகு புலி ராஜ்யம் செழித்தது. அதிகாரிகள் பயந்து ஒழுங்காக அவரவர் வேலையைக் கவனித்தனர். லஞ்சம் வாங்குவதில்லை. ஆனுல் நரி நினைத்தபடி ஒரு ஸம்பவம் தோன்றிற்று.

தர்: அதென்ன? விவரித்துக் கூறுங்கள்.

பீஷ்: நரியிடம் ஸர்வ அதிகாரத்தையும் அளித்ததால் மற்ற அதிகாரிகளுக்கு நரியிடம் பொருமை உண் டாயிற்று. நரி மீது ஏதேனும் தோஷத்தைக் கல் பித்து அதை வேலையை விட்டு நீக்கும்படி செய்வ தென தீர்மானித்தார்கள்.

---

2 ராஜாக்கள் ஒன்ருகப் பிரயாணம் செல்லலாகாது.

**தர் :** தோஷமே இல்லாத நரியிடம் எப்படி ? என்ன தோஷங் கல்பித்தார்கள் ?

**பீஷ்:** தந்த்ரமறிந்த ஜாதி அல்லவா நரிகள் ! தன் இனத் தவனைக் கெடுக்கக் கோடாலிக் காம்புகள்போல் இருந்தன. புலிராஜனுக்கு ஒருநாள், வேளையில் ஆஹாரம் கொடுக்காதபடி செய்தனர் நரிகளுடன் கூடிய அதிகாரிகள்.

**தர் :** ஏற்கனவே கோபம் நிறைந்தது புலி ! பசியும் வந்தால் கேட்க வேண்டுமா ? என்ன செய்தது புலி ?

**பீஷ் ;** ஒரே ஆக்ரஹத்துடன் உணவளிக்கும் அதிகாரியைப் பார்த்து ஏன் உணவு ஸமயத்திற்கு வரவில்லை ? என்று கடிந்து கேட்டது. நடுநடுங்கிக் கொண்டு அரசே! நாங்கள் என்ன செய்வோம் ? வழக்கப்படி தங்களுக்கு உசிதமான மாம்ஸங்களைத் தயார் செய்து வழக்கமான இடத்தில்தான் கொண்டு வைத்தோம்.

**புலி:** அப்படியானால் அந்த மாம்ஸம் எங்கே ? சொல் !

**அதிகாரி:** வேலைக்காரன் சொன்னால் மஹாராஜா நம்ப மாட்டார். எங்களிடம் கோபமும் கொள்ளக்கூடும்.

**புலி :** பாதகமில்லை ! சொல் கேட்போம் !

**வேலை:** மஹாராஜா ! தங்கள் அருமை மந்திரி தங்கள் உணவை எடுத்துச் சென்றார்.

**புலி :** ஒரு நாளுமில்லை! நரிதான் மாம்ஸம் சாப்பிடுவதில்லையே !

**வே :** அதனால்தான் உண்மையைக்கூட மகாராஜாவிடம் கூற பயப்பட்டோம் இத்தனை நாள்.

**புலி :** அது உண்மைதானா ?

**வே :** மந்திரி வேஷம் போடுபவர் பிரதி தினம் மாம்ஸம் அளிக்கும் எங்களுக்கல்லவோ அவர் மாம்ஸம் சாப்பிடுவது தெரியும் !

**புலி ;** நிஜந்தானா இது ! உண்மையைக் கூறுங்கள்.

**வே :** எங்கள் சொல்லில் நம்பிக்கை இல்லாவிடில் மகாராஜா நேரில் மந்திரி வீடுபோய் இப்போதே பரீக்ஷித்துப் பார்க்கலாம்.

---

3 பிராம்மணர்கள் சேர்ந்து செல்லலாகாது.

# உபமன்யு பக்த விலாஸம்.

## திருக்ஞானஸம்பந்தர். (ஆவணிமீ தொடர்ச்சி)

கூன் பாண்டியன் சமணரை இகழ்ந்து சம்பந்தரைப் புகழ்ந்த காலத்தில் சமணர்கள் மூன்ரும் முறையும் பரீக்ஷித்து முடிவு செய்யுங்கள் என்ருர்கள். அரசன் அதற்கும் இசைந்தான். அமைச்சரும் தோற்றவரை என்ன செய்வது என்று வினவ, கழுவில் ஏற வேண்டும் என்று சமணரே கூறினர்.

அவரவர் மந்திரங்களை ஏட்டில் எழுதி ஆற்றில் விடுவதென்றும், பிரவாகத்துடன் ஓடாமல் அதை எதிர்த்து ஓடும் ஏடுடையவரே வெற்றி பெற்றவரென்றும் முடிவு செய்தனர். சமணர் ஏடு ஆற்றுடன் ஓடிற்று. சம்பந்தரின் ஏடு வைகை யாற்றின் வேகத்தை எதிர்த்து வெகு தூரம் முன்னேறிச் சென்றது. அதைக்கண்ட எல்லோரும் சைவ சமயமே சிறந்ததெனக் கொண்டாடினர். அன்றியும் ஒரு பதிகத்தினுல் அவன் கூனையும் நிமிர்த்தினுர் ஸம்பந்தர். ஸம்பந்தர் விட்ட ஏட்டைத் தேடி எடுக்க வேண்டுமென எல்லோரும் சென்று திருவேடகம் என்ற இடத்திலே அதைக் கண்டு எடுத்தார்கள். ஒரு சிவலிங்கந் தோன்றி ஏட்டைக் காட்ட அது திருவேடக க்ஷேத்ரமாயிற்று. சமணர்கள் தாங்கள் கூறியபடி தோல்வியுற்றதால் கழுவேறினுர்கள்.

பாண்டியன் அன்றுமுதல் முன்னோர்சென்ற வழியைக் கைப்பற்றி சைவனுனுன். இதனிடையில் ஸம்பந்தரின் தந்தை சிவபாதர் புத்திரனைக் காண அவா கொண்டு மதுரை வந்தார். ஆங்குள்ளோர் அனைவரும் அரிய புதல்வனைப் பெற்றெடுத்த அவரை வணங்கிக் கொண்டாடிப் பூஜித்தார்கள். பாண்டியனுடன் சேர்ந்து ராமேச்வரம் வரையிலுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கும் ஸம்பந்தர் முதலிய சிவனடியார்கள் சென்ருர்கள். அங்கிருந்து திரும்பும் பொழுது முள்ளிவாய்க்கரை என்ற ஊரில் உள்ள ஆறு இரு கரையும் புரண்டோட, ஓடமும் செல்ல முடியாத நிலையில்வருந்தினர். உடனே

ஸம்பந்தர் பகவானைத் துதித்துப்பாட ஓடம் தானே புறப்பட்டு அக்கரைக்கு அனைவரையும் அழைத்துச் சென்றது. போதிமங்கை எனும் புத்தர் ஆலயத்தின் அருகே சாரிபுத்தன் என்ற தலைவன் ஸம்பந்தரை வாதுக்கழைத்தான். ஸம் பந்தர் பாட்டுகளை அவ்வப் போது எழுதி வரும் ஒரு சிஷ்யன் அரிய ஓர் பாட் டைப்பாட சமணனது தலை வேறு, உடல் வேறாக விழுந் தது. அதைக்கண்டு அஞ்சி மற்ற சமணர்களும் சைவ மதத்தைத் தழுவினர்.

ஸம்பந்தர் மூன்றும்முறை அப்பரைச் சந்தித்தார். பிறகு தொண்டை நாட்டி லுள்ள பற்பல திவ்ய க்ஷேத்ரங்களுக்கு யாத்திரை செய்தார். திருவோத் தூரை அடைந்த பொழுது ஓர் அன்பர் சிவ கைங்கர் யத்திற்காக ஆங்கு வைத்து வளர்க்கும் பனைமரமெல் லாம் பூக்காமலும் காய்க் காமலும் ஆண் பனைகளா கவே இருந்தன. அந்த பக்தரின் வேண்டுகோளுக் கிணங்கி ஓர் பதிகத்தில் அவைகள் அனைத்தையும் பெண் பனைகளாக்கினார். வெகு நாள் காஞ்சியிலேயே இருக்கும் பொழுது திரு வாலங்காட்டில் உள்ள பக வான் "என்னை மறந்தனை யோ" என்று சொப்பனத் தில் கூற அங்கும் சென் றார். ஸ்ரீ காளஹஸ்தி முத லிய திவ்ய க்ஷேத்திரங் களுக்குச் சென்று அங் கிருந்தே கேதாரம், கோகர் ணம் முதலிய வடநாட்டில் இமயத்திலுள்ள க்ஷேத்தி ரங்களைப் பற்றிப் பாடினார். ஆங்கிருந்து திருவொற்றி யூர் வந்து திருமயிலைக்கும் செல்ல விரும்பினார். ஆங்கு சிவநேசம்செட்டியார் என்ற வைசியர் அவரை வரவேற் றார். அவரது சரிதத்தை யும் ஸம்பந்தரிடம் கூறக் கேட்டார். அவருக்குச் சிவ னருளால் ஒரே பெண் பிறந்தது. அவளழகைக் கண்டு 'பூம்பாவை' எனப் பெயரிட்டார். அவளை மணப்பவனே தன் சொத் துக்கு உரியவனாவான் என் றும் தீர்மானித்தார். ஒரு நாள் அப்பெண்ணை அரவம் தீண்டப் பலவகை சிகித்சை செய்து பார்த்தார். அவள் பிழைக்கவில்லை. அவளைக் கொளுத்தி அவள் சாம்பலை யும் எலும்பையும் ஒருகுடத் தில் வைத்து அத்புதமான செயல்களைச் செய்யும் ஸம்பந்தரைச் சார்ந்தவள் இவள் என்று பெண்போல வே அக்குடத்தை அலங்

கரித்து கன்யர் மடத்தில் வைத்திருந்தார். இதைக் கேட்டு வியந்தார் ஸம்பந்தர். சிவநேசர் திருவொற்றியூரிலிருந்து திருமயிலைவரை பந்தலமைத்து வாழைதோரணங்களைக்கட்டி அவரை வரவேற்றார்.

சம்பந்தர் சிவநேசரது செயலை மெச்சி அவர் கருத்துப்படி சாம்பல் எலும்பு நிறைந்த அக்குடத்தைக் கோயிலருகே கொண்டு வரும்படி செய்தார். கபாலியை வேண்டிச்சில பாடல்கள் பாடினார். பானை உடைந்தது. அதிலிருந்து பூம்பாவை உயிர் பெற்றெழுந்தாள். அதைக்கண்டு அனைவரும் ஆச்சரியமடைந்தனர். சிவநேசர் தான் ஸங்கல்பம் செய்தபடி அவளை ஸம்பந்தருக்கு அளித்து அவளை மனைவியாக ஏற்க வேண்டுமெனப் பிரார்த்தித்தார். அவளை எழுப்பிய யான் தந்தை போல் ஆவேன் என அவளை மணக்கமறுத்தார். சிவநேசரும் மற்றவருக்கு இவளை நான் அளிக்கமாட்டேன் என்று கன்யாமடத்திலேயே அமர்த்தினார் அவளை. அவளும் இறைவனையும் ஸம்பந்தரையும் நினைத்து நற்கதி அடைந்தாள்.

ஸம்பந்தரது தந்தையும் மற்றோரும் இல்லறத்தில் ஈடுபட்டுப் பல வேள்விகளைச் செய்யவேண்டுமென ஸம்பந்தரை வேண்டினர். விருப்பமில்லாவிடினும், பெரியோர் சொற்படி திருநல்லூரிலே தோன்றிய நம்பாண்டார் நம்பியின் மகளை மணந்தார். அவர்களது விவாஹம் தெய்விக விவாஹம் போல் உலகெலாம் போற்ற மிகச் சிறந்த முறையில் நடந்தேறியது. ஸம்பந்தரும் பல அடியார்கள் சூழப் "பிறவிக்கடலை நீக்க உம்மை அண்டினேன். உலக வாழ்வில் என்னை ஈடுபடுத்தத்தகுமோ என்பது போல் வேண்ட," அனைவருடனும், உன் மனைவியுடனும் என் திருவொளியில் வந்து சேர்வாய் என்று பகவான் கூற, அங்ஙனமே சிவஜோதியில் இரண்டற ஒன்றாய்க் கலந்தார் ஸம்பந்தர்.

## 30. கலிக்காம நாயனார்.

சோழ நாட்டிலே திருமங்கலம் என்ற நகரம் உண்டு. அதில் சோழ அரசனின் சேனாதிபதியாயுள்ள ஏயர் கோன் குடும்பம் என்பதே மிகப் பழமையானது. அக்குலத்தில் தோன்றிய கலிக்காம நாயனார் சுந்தரர்

பகவானை மனையிடம் தூதனாக அனுப்பியதைக் கேட்டு மனம் வருந்தி தற்கொலை செய்துகொண்டார். பிறகு இறைவனருளால் உயிர் பெற்றெழுந்து சுந்தரரிடம் நட்பு கொண்டு வாழ்ந்தார். (சுந்தரர் சரித்திரத்தில் இது விரிவாகக் கூறப்பட்டது.

## 31. ஸ்ரீமூலதேவர்-(திருமூலநாயனார்.)

கைலாஸநாதனைச்சூழ்ந்து எண்ணிறந்த சிவகணங்களில் பகவத்ஸேவை செய்பவர். அவர்களில் ஒருவர் ஸ்ரீ மூலதேவர். ஆசை பல வகை. பூமியில் பகவான் வஸிக்கும் திவ்ய க்ஷேத்ரங்களை தர்சிக்க அவா கொண்டார் அவர். பற்பல விடங்கள் சென்று திருவிடமருதூரருகே சாத்தனூரில் பசுக்களெல்லாம் ஒரு பிணத்தருகே நின்று கண்ணீர் விடுவதைக் கண்டார். அவன் மாடு மேய்க்கும் இடையன். அவன் மரணத்தினால் துன்பப்படும் பசுக்களை ஸமாதானப் படுத்த தன் உடலை விட்டு இடையன் உடலிலே புகுந்தார். பசுக்களும் இடையர்களும் அகமகிழ்ந்தனர். ஆனால் பாசத்திலிருந்து விடுபட்டவர் பசுக்களிடம் பாசம் கொள்வரா? இரவில் அவ்வுடலைவிட்டுத் தன்னுடலைத் தேடினார். எக்காரணம் பற்றியோ இறைவனதை மறைத்து விட்டார். இடையன் உடலிலேயே புகுந்தார். தனது நிலையை விளக்கிக்கூறி திருவாடுதுறை வந்தார். ஸமாதியிலமர்ந்தார். நீரில் மூழ்கி ருத்ர ஜபம் செய்தாரெனவும் கூறுவர். ஆண்டுக்கோர் பாட்டாக மூவ்வாயிரம் திருமந்திரம் பாடினார். சிவனடி சேர்ந்தார். தமிழ் நூல்களிலே ஒப்புயர்வற்றது திருமந்திரம்.

## 32. தண்டிநாயனார்.

திருவாரூரிலே தோன்றிய இவர் பிறவிக்குருடர். அகக்கண்ணால் அநவரதமும் அரனையே சிந்திப்பார். சிவாலயத்தருகே உள்ள சிவ புஷ்கரிணியை ஆழமாக்கி என்னாளும் அடியார் நீராடும்படி செய்ய அவருக்கு அவா தோன்றிற்று. தினமும் சிறிது மண்வெட்டி கரையில் ஏற்ற எண்ணினார். பொதுவாக அங்கஹீனருக்கு அறிவு அதிகமென்பர். குருடர் எப்படி மண்வெட்டி கரை ஏற்றுவது? என்றனர் சமணர்கள்.

# அம்பையின் துயரம்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

அஷ்ட வஸுக்களின் அம்சத்தால், கங்கா புத்ரனுக அவதரித்த இந்த தேவவ்ரதனுக்கு சந்ததி ஏற்படக் கூடாது என்பது அஷ்டவஸுக்கள் கங்கையினிடம் கேட்டுக்கொண்ட வரம். விதியும் அதற்கு ஸாதகமாக தேவ வ்ரதனைத் தன் தந்தைக்காக பயங்கர பிரதிக்ஞை யில் ஈடுபடுத்தியது. பீஷ்மன் என்ற கீர்த்தி பெறும் பெயரும் வந்து சேர்ந்தது.

சந்தனுவுக்கு ஸத்யவதியிடம் இரு பிள்ளைகள் பிறந் தனர். சித்திராங்கதன் என்ற மூத்தவன், சிறுவயதிலே ஒரு கந்தர்வனுடன் யுத்தம் செய்கையில், அவனுல் கொல்லப்பட்டான். அடுத்தபடி விசித்திரவீரியன் பதவி ஏற்ருன். அவனுக்குத் திருமணம் செய்விக்க மூத்தவரான பீஷ்மர், காசிராஜன் பெண்கள் மூன்றுபேர், அம்பா, அம்பிகா, அம்பாலிகா என்பவர்களுக்காக அமைந்த ஸ்வயம்வரத்தை நாடிச் சென்ருர். அங்கே கூடியிருந்த அரசர்களனைவரையும் போரிலே வென்று, அந்த மூன்று கன்னிகைகளையும் தம்பிக்காக ரதத்தில் ஏற்றித் தன் பெண்களைப் போலக் கருதி அவர்களைத் தன் நாட்டிற்கு அழைத்துச் சென்ருர். பீஷ்மரை எதிர்த்த அரசர்களில் ஸால்வன் என்ற புகழ்பெற்ற பலவானுன அரசனும் ஒருவன். அவன் மூத்தவளான அம்பையை விரும்பியிருந்தான். அம்பையும் அவனையே விரும்பியிருந்தாள். இதையறிந்த விசித்ரவீரியன் தன் தமையனிடம் தெரிவிக்கப் பீஷ்மரும், அம்பாவை ஸால்வ னிடம் அனுப்பி வைத்தார். ஸால்வன் அம்பாவை ஏற்க மறுத்தான். அம்பா திரும்பிவந்து பீஷ்மரிடம் தன்னை

---

*ப்ராம்மணர் போ என்ருல் போகலாம்—(கிருஷ்ணர்)*

அவரே மணந்துகொள்ள வேண்டும் என வேண்டினுள். பீஷ்மர் "தான் ஜிதேந்த்ரியன்" என்று மறுக்க, ஸால்வ னிடம் மறுபடியும் சென்றுள் அம்பை. அவன் மறுக்க மறுபடியும் பீஷ்மனிடம் வந்தாள். இப்படி ஆறுவருஷம் தன் இச்சை நிறைவேருமல் அலேந்து திரிந்தாள். மனம் வாடி, மேனி இளேத்து, அழகு குலேந்து எல்லோராலும் வெறுக்கப்பட்டு வனம் சென்றுள்.

அந்த வனத்தில் தன்னுடைய மாதாமஹரான ஹோத்ரவாஹனன் என்ற ராஜரிஷியைக் கண்டு தன் துயரத்தைச் சொல்லி அழுதாள். அவரும் உள்ளம் கனிந்து எப்படியேனும் பீஷ்மரை நிர்ப்பந்தித்து, அம் பாவை ஏற்கும்படிச் செய்ய உபாயம் தேடினுர். அது சமயம் பரசுராமர் யதேச்சையாக அந்த ஆசிரமம் வந்து சேர்ந்தார். பரசுராமருடைய சிஷ்யர் பீஷ்மர். அதனுல் குருவின் சொல்லே பீஷ்மர் ஒருக்காலும் மீறமாட்டார் என்ற நம்பிக்கையுடன் பரசுராமரை அணுகித் தன் வேண்டுகோளேத் தெரிவித்தாள் அம்பா. பரசுராமரும் மனமிரங்கி பீஷ்மரை அழைத்துவரச்செய்தார். பீஷ்மர் வந்ததும், தன் உத்தரவைப் பரசுராமர் வெளியிட்டார். இது குருவின் ஆணே என்றும், அதை எக்காரணத் தாலும் மீறலாகாது என்றும் வற்புறுத்தி அம்பையை ஏற்றுக்கொள்ளச் சொன்னுர். பீஷ்மர் அறவே மறுத்து, குரு வசனமாயினும், தனது ஸத்ய ப்ரதிக்ஞையே பெரி தென்றும், பேசினுர். பரசுராமர் கோபமடைந்து தன் சொல்லே அவமதித்த பீஷ்மரைத் தண்டிக்கப் போருக்கு அழைத்தார்.

இரு பெரிய வீரர்களும், வில்லாளிகளுமான, பரசு ராமருக்கும் பீஷ்மருக்கும் குருக்ஷேத்திரத்தில் யுத்தம் தொடங்கியது. எதையும் வெற்றிபெறச் செய்ய குருவின் ஆசியே அவசியம் என்றறிந்த பீஷ்மர் யுத்தம் ஆரம் பிக்குமுன் பரசுராமரை அணுகிப் பணிந்து, தனக்கு

---

*இரவுக்குத் தீபம் சந்திரன். பகலுக்குத் தீபம் ஸூர்யன்.*

வெற்றி கிட்டவேண்டும் என்று வரன் கேட்டு நின்றார். பரசுராமரும், மகிழ்ந்து 'யுத்தம் செய் உன் உறுதியைப் பார்ப்போம். உன் அபீஷ்டம் உன் குருபக்தியால் நிறைவேறும்' என்று அனுமதி அளித்தார். இந்த அதிசய யுத்தத்தைக் காண இரு உலகிலும் கூடி வந்தனர். இருபது நாட்களுக்கு மேலாக இடைவிடாமல் நடந்த யுத்தத்தில் வெற்றி தோல்வி காணமுடியவில்லை. கடைசீ நாட்களில் பரசுராமருடைய பாணங்களால் அடிபட்டு பீஷ்மர் பூமியில் விழ, அஷ்ட வஸுக்கள் அவரைத் தாங்கி அவருக்குப் புது சக்தியை அளித்தனர். தந்தை சந்தனு அளித்த வரமும் பொய்யாகாதல்லவா ? தாய் கங்கையின் பரிவும் வீணாகாதல்லவா ?

இனி பரசுராமரை ஜயிக்கும் உபாயத்தை பீஷ்மரின் காதில் ஓதினர் வஸுக்கள். மரணப் படுக்கையில் விழுந்த பீஷ்மர், புது சக்தியுடன் எழுந்து யுத்தத்திற்கு வந்தார். வஸுக்கள் சொல்லியபடி 'ப்ரஸ்வாபம்' என்ற அந்த மோகனாஸ்த்ரத்தைப் பீஷ்மர் கையில் எடுக்கவும், நாரதர் முதலான தேவரிஷிகள் ஓடி வந்து இடைமறித்து, இது தவறு! குருவுக்கு ஹானி விளைவிக்கும் இந்த அஸ்திரப்ரயோகம் வேண்டாம், யுத்தம் நிற்கட்டும் என்று எச்சரித்தனர். பீஷ்மர் கலங்காமல் தன் குரு நிறுத்திக்கொண்டால் தானும் யுத்தத்திலிருந்து மீள்வதாகச் சொன்னார். இருவரிடமும் மாறி மாறி தூது சென்று, இறுதியில் பரசுராமரே தாம் யுத்தத்தை நிறுத்திக்கொண்டு, பீஷ்மருக்கு ஜயத்தை அளிக்க ஒப்புக் கொள்ளச் செய்தனர். பரசுராமரும் அம்பையிடம் வந்து 'பெண்ணே! உன் தலை விதியை என்னாலும் மாற்ற முடியவில்லை' என்று சொல்லிச் சென்றார். அம்பையும் வேறு வழி காணாமல் வனம் சென்று பல வருஷம் கார்த்திகேயனை நோக்கித் தவம் புரிந்தாள். முடிவில் அந்த காங்கேயனான கார்த்திகேயனும் எதிரே தோன்றி

---

ஒரு மாலையை அளித்து, 'பெண்ணே ! இந்த மாலையை யார் அணிந்துகொள்ளுகிருரோ, அந்த வீரனே பீஷ்மனைக் கொல்வான்!' என்ருர். அம்பையும் அந்த மாலையை யார் கழுத்திலாவது அணிவிக்க நகரத்தை நாடிச் சென்ருள்.

---

## தார்மிகச் செய்திகள்.

**விவாஹத்தில் வித்வத் ஸபை:** ஸ்ரீ K. S. கிருஷ்ணய்யர், இஞ்ஜினீர், ஆவணி 17உ புத்ரி விவாஹம், புத்ர உபநயனம் செய்து பெரும்பாலும் சென்னை நகரிலுள்ள வேதசாஸ்த்ர வித்வான்களைப் பரிவுடன் அழைத்து சிறிது உபன்யாஸம் செய்வித்து அவரவருக்கேற்றபடி (என நினைத்து) 11 ரூ. முதல் 3 ரூ. வரை நூற்றுக்கணக்கானவர்களுக்கு ஸன்மானம் செய்தார். கச்சேரிக்கும் பார்டிக்கும் அபாத்ரவர்ஷம் செய்வோருக்கு பாடம் கற்பித்தார்.

**ஸ்ரீ வ்யாஸ பூஜா பிக்ஷை:** வழக்கப்படி நமது ஆசிரியர் காமநாயகன்பாளையத்தில் ஸ்ரீமதாசார்யாளுக்கு பிக்ஷா கைங்கர்யத்தை விநாயகசதுர்த்தியன்று நடத்தி சென்னைக்குத் திரும்பினுர்.

**கும்பாபிஷேக வேதபாராயண தர்மம் :** ஆவணிமீ 14உ கோமாத்ரு புரத்தில் ஸ்ரீ முக்தாம்பிகா ஸமேத அபிராமேச்வர ஸ்வாமிக்கு கும்பாபிஷேகம் நடந்தது. அச்சமயம் பிராம்மண ஸமாராதனை, வேதபாராயணக்காரர் ஆராதனை, தக்ஷிணை முதலியவைகளை ஆயிரம் ரூபாய்க்குமேல் செலவு செய்து நமது ஆசிரியர் செவ்வனே நடத்தினுர்.

**சிறந்த முறையில் ஸஹஸ்ரபோஜனம்:** 15உ மாம்பலம் ராமஸமாஜம் ஸ்ரீ மஹாபாரத உபன்யாஸ அங்கமாக விதிப்படி ஸம்ப்ரதாய விரோத மின்றி ஸ்ரீ வைஷ்ணவருக்கும் ஸ்மார்த்தருக்கும் பகவன்நாமாவைக் கூறி பாதப்ரக்ஷாளனம் செய்து அன்னதானம் தக்ஷிணை தாம்பூலம் அளித்தது. அதற்கடுத்த வாரம் ஆயிரக்கணக்கான ஏழைகளுக்கு அன்னமளித்தது.

**கும்பாபிஷேகம் அபரிமிதம் ! ஆனுல் ?** பழனி, சிக்கல், ஈரோடு, காக்குப்பம், நாச்சியார்கோவில் முதலிய பல இடங்களில் கும்பாபிஷேகம் நடந்தன. சில இடங்களில் வைதிகத்தைவிட தமிழே பிரதானமாக இருந்தது.

---

ஹிதத்தைத் தேடுபவனே பந்து. போஷிப்பவனே பிதா.

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி.

14. प्रायः प्रपन्नजनताप्रथमावगाह्यौ
मातुः स्तनाविव शिशोरमृतायमानौ ।
प्राप्तौ परस्पर तुलामतुलान्तरौ ते
श्रीवेंङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ப்ராய: ப்ரபன்னஜநதா ப்ரதமாவ காஹ்யௌ
மாது: ஸ்தநாவிவ ஶிஶோரம்ருதாய மானௌ ।
ப்ராப்தௌ பரஸ்பரதுலாமதுலாந்தரௌ தே
ஸ்ரீ வேங்கடேஶ சரணௌ ஶரணம் ப்ரபத்யே ॥

ஸ்ரீ வேங்கடேஶ - திருவேங்கட நாதனே, ப்ராய: - பெரும்பாலும், ப்ரப்பன்னஜநதா - அடைக்கலம் புகுந்த ஜன ஸமூஹத்திற்கு, ப்ரதம அவகாஹ்யௌ - முதலில் முழுகி அனுபவிக்கத்தக்கவைகளும், ஶிஶோ: - குழந்தைக்கு, மாது: - தாயினுடைய, ஸ்தநௌ இவ-ஸ்தநம்போல், அம்ருதாயமானௌ - அமிர்தமாயிருப்பவைகளும், பரஸ்பரதுலாம் - ஒன்றுக்கொன்று ஒப்புவமையை, ப்ராப்தௌ - அடைந்தவைகளும், அதுலாந்தரௌ - வேறு ஒரு வஸ்துவோடும் ஒப்பிடமுடியாதவைகளுமான, தே-உனது, சரணௌ - திருவடிகளை, ஶரணம் ப்ரபத்யே - சரணடைகின்றேன்.

15. सत्वोत्तरैस्सततसेव्य पदाम्बुजेन
संसारतारकदयार्द्रदृगञ्चलेन ।
सौम्योपयन्तृमुनिना मम दर्शितौ ते
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥

ஸத்வோத்தரைஸ் ஸதத ஸேவ்ய பதாம்புஜேந
ஸம்ஸார தாரக தயார்த்ர த்ருகஞ்சலேன ।
ஸௌம்யோப யந்த்ரு முநிநா மம தர்ஶிதௌ தே
ஸ்ரீ வேங்கடேஶ சரணௌ ஶரணம் ப்ரபத்யே ॥

---

ஸ்ரீ வேங்கடேஶ - ஸ்ரீ வேங்கடேசனே, ஸத்வ உத்தரை: - நற்குணமுடையவர்களால், ஸததஸேவ்ய பதாம்புஜேந - எப்பொழுதும் வணங்கத்தக்க பாதார விந்தம் உள்ளவரும், ஸம்ஸார தாரக - பிறவிக்கடலைத் தாண்டுவிப்பதும், தயா ஆர்த்ர - தயையினுல் நனைந்ததுமான, த்ருக் அஞ்சலேந - கடைக்கண் உள்ளவருமான, ஸௌம்யோபயந்த்ரு முநிநா - மணவாள மாமுனிகளால், மம - எனக்கு, தர்ஶிதௌ - காண்பிக்கப்பட்ட, தே ஶரணௌ - உன்திருவடிகளை, ஶரணம் ப்ரபத்யே-சரணடைகின்றேன்.

16. श्रीश श्रिया घटिकया त्वदुपाय भावे
प्राप्ये त्वयि स्वयमुपेयतया स्फुरन्त्या ।
नित्याश्रिताय निरवद्य गुणाय तुभ्यं
स्यां किङ्करो वृषगिरीश न जातु मह्यम् ॥

ஸ்ரீஶ ச்ரியா கடிகயா த்வதுபாய பாவே
ப்ராப்யே த்வயி ஸ்வயமுபேயதயா ஸ்புரந்த்யா ।
நித்யாச்ரிதாய நிரவத்ய குணய துப்யம்
ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீஶ நஜாது மஹ்யம் ॥

வ்ருஷகிரீஶ - திருவேங்கட நாதனே, ஸ்ரீச - லக்ஷ்மீ பதியே, த்வத் உபாயபாவே - நீ உபாயமாக இருக்கும் பொழுது, ஸ்வயம் கடிகயா - தானகவே சேர்த்து வைப்பவளும், த்வயி - நீ, ப்ராப்யே - அடையப்படும் வஸ்துவாய் இருக்கும் பொழுது, ஸ்வயம் - தான், உபேயதயா ஸ்புரந்த்யா -அடையப்படும் பயனுக விளங்குபவளுமான, ச்ரியா - திருமகளால், நித்ய ஆச்ரிதாய - எப்பொழும் அடையப்பட்டவனும், நிரவத்ய குணய - குற்றமற்ற குணங்களோடு கூடினவனுமான, துப்யம் - உனக்கு, கிங்கர:-தொண்டனுக, ஸ்யாம் - இருப்பேன். ஜாது- ஒரு பொழுதும் நான், மஹ்யம் -எனக்கு, கிங்கர: -கிங்கரனுக. நஸ்யாம் - இருக்கமாட்டேன்.

**ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி முற்றிற்று.**

---

**பொருள் தேடுவது கஷ்டம். அதை ரக்ஷிப்பதும் கஷ்டம்.**

# ஸ்ரீ வேங்கடேச மங்களா சாஸனம்.

1. श्रियः कान्ताय कल्याण निधये निधयेऽर्थिनाम् ।
श्रीवेङ्कट निवासाय श्रीनिवासाय मङ्गलम् ॥

ஶ்ரிய: காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநாம் ।
ஸ்ரீவேங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ॥

ஶ்ரிய: காந்தாய - இலக்குமி அன்பனும், கல்யாண நிதயே - மங்களங்களுக்குப் புதையல் போன்றவனும், அர்திநாம் நிதயே - யாசகர்களுக்கு நிதிபோன்றவனும், ஸ்ரீவேங்கட நிவாஸாய - திருப்பதியில் எழுந்தருளியிருப் பவனுமாகிய, ஸ்ரீனிவாஸாய-ஸ்ரீனிவாஸப்பெருமாளுக்கு, மங்களம் - மங்களமானது, அஸ்து - இருக்கட்டும்.

2. लक्ष्मीसविभ्रमालोक सुभ्रूविभ्रमचक्षुषे ।
चक्षुषे सर्वलोकानां वेङ्कटेशाय मंगलम् ॥

லக்ஷ்மீஸவிப்ரமாலோகஸுப்ரூ விப்ரமசக்ஷுஷே ।
சக்ஷுஷே ஸர்வலோகாநாம் வேங்கடேஶாய மங்களம் ॥

லக்ஷ்மீஸவிப்ரம ஆலோக - திருமகளும் திகைத்து நோக்கக்கூடிய, ஸுப்ரூவிப்ரமசக்ஷுஷே-அழகிய புருவங்கள் நெறிந்த கண்களை உடையவனும், ஸர்வலோகாநாம்- எல்லா வுலகங்களுக்கும், சக்ஷுஷே - கண்போன்றவனுமாகிய, வேங்கடேஶாய - திருவேங்கட முடையானுக்கு, மங்களமஸ்து - மங்களமிருக்கட்டும்.

3. श्रीवेङ्कटाद्रि शृङ्गाग्र मङ्गलाभरणाङ्घ्रये ।
मङ्गलानां निवासाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஸ்ரீவேங்கடாத்ரி ச்ருங்காக்ர மங்களாபரணாங்க்ரயே ।
மங்களாநாம் நிவாஸாய வேங்கடேஶாய மங்களம் ॥

ஸ்ரீ வேங்கடாத்ரி ச்ருங்காக்ர மங்கள ஆபரண அங்க்ரயே - திருமலையின் சிகரத்திற்கு மங்களத்தை உண்டு பண்ணுகிற அணியாக விளங்குகின்ற திருவடிகளை உடையவனும், மங்களாநாம் - மங்களங்களுக்கு, நிவாஸாய - இருப்பிடமானவனுமாகிய, வேங்கடேஶாய - வேங்கடேசனுக்கு, மங்களமஸ்து - மங்களமுண்டாகட்டும்.

---

**அது அழிந்தாலும் செலவானாலும் துக்கம் ஏற்படும்.**

4. सर्वावयव सौन्दर्य संपदा सर्व चेतसाम् ।
सदा संमोहनायास्तु वेङ्कटेशाय मङ्गलम् ॥

*ஸர்வாவயவ ஸௌந்தர்ய ஸம்பதா ஸர்வசேதஸாம் ।*
*ஸதா ஸம்மோஹநாயாஸ்து வேங்கடேஶாய மங்களம் ॥*

ஸர்வாவயவ ஸௌந்தர்யஸம்பதா - எல்லா உறுப்புகளின் அழகெனும் ஸம்பத்தினால், ஸர்வசேதஸாம் - எல்லோருடைய உள்ளங்களையும், ஸதா - எப்பொழுதும், ஸம்மோஹநாய - மயக்குகின்றவனாகிய, வேங்கடேஶாய- திருவேங்கடனுக்கு, மங்களமஸ்து-மங்களமுண்டாகட்டும்.

5. नित्याय निरवद्याय सत्यानन्द चिदात्मने ।
सर्वान्तरात्मने श्रीमद्वेङ्कटेशाय मङ्गलम् ॥

*நித்யாய நிரவத்யாய ஸத்யாநந்தசிதாத்மநே ।*
*ஸர்வாந்தராத்மநே ஶ்ரீமத்வேங்கடேஶாய மங்களம் ॥*

நித்யாய-அழிவற்றவனும், நிரவத்யாய - குற்றமற்றவனும், ஸத்ய ஆனந்த சித் ஆத்மனே - நிர்விகாரனும், ஆனந்த ஸ்வரூபனும், ஞான ஸ்வரூபனும், ஸர்வ அந்தராத்மனே - எல்லோருள்ளத்துள்ளும் உயிராய் உறைபவனுமாகிய, ஶ்ரீமத் வேங்கடேஶாய மங்களம் - திருவேங்கடமுடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

6. स्वतः सर्वविदे सर्व शक्तये सर्वशेषिणे ।
सुलभाय सुशीलाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

*ஸ்வதஸ்ஸர்வவிதே ஸர்வஶக்தயே ஸர்வஶேஷிணே ।*
*ஸுலபாய ஸுஶீலாய வேங்கடேஶாய மங்களம் ॥*

ஸ்வத: - தானாகவே, ஸர்வவிதே - எல்லாமறிந்தவனும், ஸர்வ ஶக்தயே - எல்லா ஶக்தியையும் உடையவனும், ஸர்வஶேஷிணே - எல்லாவற்றிற்கும் தலைவனும், ஸுலபாய - எளிதில் அடையக்கூடியவனும், ஸுஶீலாய- நல்லொழுக்கம் உடையவனுமாகிய, வேங்கடேஶாய மங்களம் - திருவேங்கட முடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

7. परस्मै ब्रह्मणे पूर्णकामाय परमात्मने ।
प्रयुञ्जे परतत्वाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

---

துக்கத்திற்கு இருப்பிடமான பொருள் எதற்காக ?

பரஸ்மை ப்ரஹ்மணே பூர்ணகாமாய பரமாத்மநே ।
ப்ரயுஜே பரதத்வாய வேங்கடேஶாய மங்களம் ॥

பரஸ்மை ப்ரஹ்மணே - பரம்பொருளும், பூர்ணகாமாய-விருப்பமெல்லாம் நிறைவேற்றகூடியவனும், பரமாத்மனே - பரமாத்மாவும், ப்ரயுஜே - ஏவுபவனும், பரதத்வாய - உண்மைப் பொருள் அனைத்திலும் உயர்ந்தவனுமாகிய, வேங்கடேஶாய மங்களம்-திருவேங்கட முடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

8. अकालतत्वमश्रान्त मात्मना मनुपश्यताम् ।
अतृप्त्यमृतरूपाय वेङ्कटेशाय मङ्गलम् ॥

அகாலதத்வம ச்ராந்த மாத்மநாமநுபஶ்யதாம் ।
அத்ருப்த்யம்ருதரூபாய வேங்கடேஶாய மங்களம் ॥

அகாலதத்வம் - காலமுழுவதும், அஶ்ராந்தம் - களைப்பின்றி, அனுபஶ்யதாம் - ஸேவிக்கின்ற, ஆத்மநாம் - ஜீவர்களுக்கு, அத்ருப்தி அம்ருதரூபாய - ஆராவமுதமாய் இருப்பவனுமாகிய, வேங்கடேஶாயமங்களம் - திருவேங்கடமுடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

9. प्रायः स्वचरणौ पुंसां शरण्यत्वेन पाणिना ।
कृपया दिशते श्रीमद्वेङ्कटेशाय मङ्गलम् ॥

ப்ராயஸ்ஸ்வசரணௌ பும்ஸாம் ஶரண்யத்வேநபாணிநா
க்ருபயா திஶதே ஸ்ரீமத்வேங்கடேஶாய மங்களம் ॥

ப்ராய: - வெகுவாக, ஸ்வசரணௌ-தன் பாதங்களை, பும்ஸாம் - ஜீவாத்மாக்களுக்கு, ஶரண்யத்வேன - சரணமென்று, பாணிநா - திருக்கையால், க்ருபயா-அன்புடன், திஶதே-அளிக்கின்றவராகிய, ஸ்ரீமத் வேங்கடேஶாய-திருவேங்கட முடையானுக்கு, மங்களம் - மங்கள முண்டாகட்டும்.

10. दयामृत तरङ्गिण्यास्तरङ्गैरिव शीतलैः ।
अपाङ्गैः सिञ्चते विश्वं वेङ्कटेशाय मङ्गलम् ॥

தயாம்ருததரங்கிண்யாஸ்தரங்கைரிவ ஶீதலை: ।
அபாங்கைஸ்ஸிஞ்சதேவிஶ்வம் வேங்கடேஶாய மங்களம்.

---

ஹரியோ, ஹரனோ, ப்ரம்மாவோ, தேவதையோ

தயாம்ருத தரங்கிண்யா: - தயை எனும் அம்ருத நதியின், தரங்கைரிவ - அலைகள் போன்றவைகளான, ஶீதலை: - குளிர்ந்த, அபாங்கை: - கடைக்கண்களால், விஶ்வம் - உலகை, ஸிஞ்சதே - நனைக்கின்றவனுகிய, வேங்கடேஶாய - திருவேங்கடனுக்கு, மங்களமஸ்து - மங்களமுண்டாகட்டும்.

11. स्रग्भूषाम्बरहेतीनां सुषमावह मूर्तये ।
सर्वार्ति शमनायास्तु वेङ्कटेशाय मङ्गलम् ॥

ஸ்ரக்பூஷாம்பரஹேதீநாம் ஸுஷமாவஹ மூர்த்தயே ।
ஸர்வார்த்தி ஶமநாயாஸ்து வேங்கடேஶாய மங்களம் ॥

ஸ்ரக்பூஷாம் பரஹேதீநாம் - மாலை அணி உடை ஆயுதம் இவைகளுக்கு, ஸுஷமாவஹமூர்த்தயே - அழகை உண்டுபண்ணுகிற திருமேனியை உடையவனும், ஸர்வ ஆர்த்தி ஶமனுய - எல்லா துக்கங்களையும் போக்குபவனுமாகிய, வேங்கடேஶாய மங்களம் - திருவேங்கடமுடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

12. श्रीवैकुण्ठ विरक्ताय स्वामि पुष्करिणीतटे ।
रमया रममाणाय वेङ्कटेशाय मंगलम् ॥

ஸ்ரீ வைகுண்ட விரக்தாய ஸ்வாமி புஷ்கரிணீ தடே ।
ரமயா ரமமாணய வேங்கடேஶாய மங்களம் ॥

ஸ்ரீவைகுண்ட விரக்தாய - வைகுண்டத்தில் பற்றைவிட்டவனும், ஸ்வாமி புஷ்கரணீ தடே - ஸ்வாமி புஷ்கரணி கரையில், ரமயா - இலக்குமியோடு, ரமமாணய - விளையாடிக்கொண்டு இருப்பவனுமாகிய, வேங்கடேஶாய மங்களம் - திருவேங்கட முடையானுக்கு மங்களமுண்டாகட்டும்.

13. श्रीमत्सुन्दरजामातृ मुनिमानस वासिने ।
सर्वलोक निवासाय श्रीनिवासाय मंगलम् ॥

ஸ்ரீமத் ஸுந்தர ஜாமாத்ரு முநிமாநஸவாஸிநே ।
ஸர்வலோகநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ॥

---

**தலையில் எழுதிய எழுத்தை அழிக்க முடியாது.**

